5th February 1959]

THE HON. SRI M. A. MANICKAVELU : ஏதோ சில இடங்களில் கனம் அங்கத்தினர் சொல்வதுபோல் இருக்கலாம். ஆனால் பெரும்பான்மையாக, தாங்கள் இருக்கும் இடங்களை விட்டு வேறு இடங்களுக்குப் போகும் மனப்பான்மை—தாங்கள் இருக்கும் இடங்கள் நெருக்கடியாக இருந்தால்கூட—அவர்களிடம் இல்லை.

### Appointment to the Ministerial Service

* 26 Q.—SRI K. B. S. MANI (on behalf of SRI M. C. Muthukumaraswamy) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மினிஸ்டீரியல் ஸெர்விஸில் தாற்காலிக, நிரந்தர வேலைகளுக்கு அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் வகுப்புவாரித் தேர்வு முறை இல்லா வேலை தேடித்தரும் ஸ்தாபனங்களால் பின்பற்றப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No Sir.

### Preparation of medicines by Devasthanams

* 27 Q.—SRI K. B. S. MANI (on behalf of SRI M. C. Muthukumaraswamy) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அறநிலையப் பாதுகாப்புக்கு உட்பட்ட எத்தனை தேவஸ்தானங்களிலிருந்து ஆயுர்வேதிக் முறைப்படி உயர்ந்த மருந்துகள் தயாரித்து ஏழைகளுக்கு இனமாகக் கொடுக்க அனுமதி வேண்டுமென அரசாங்கத்திற்கு முறையீடு வந்துள்ளன ?

(ஆ) அவைகளில் எத்தனை தேவஸ்தானங்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டுள்ளன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) None, Sir.

(b) Does not arise.

SRI K. B. S. MANI : தேவாலய தர்மகர்த்தாக்கள், இந்த மருந்துகள் என்னென்ன பலன்கள் எவ்வளவு எவ்வளவு அளிக்கின்றன என்று பரீட்சித்துப் பார்த்த பிறகு அவைகளை வெளியே அனுப்புகிறார்களா, அல்லது பரீட்சிக்காமலே மக்களுக்குக் கொடுத்து மக்களிடத்தில் அவைகளைப் பரீட்சிக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆயுர்வேத முறைப்படி மருந்து தயாரித்து மக்களுக்குக் கொடுக்க எத்தனை தேவஸ்தானங்கள் முன் வந்திருக்கின்றன என்று மூலக் கேள்வியில் கேட்கப்பட்டது. அதற்கு, " ஒரு தேவஸ்தானமும் முன் வரவில்லை " என்று நான் பதில் சொன்னேன்.

### Polytechnics

* 28 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the total number of Polytechnics in the State, district-war;

(b) the total number of students studying in all the polytechnics; and

(c) the number of students studying in each polytechnic?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a), (b) & (c) A statement [a] is laid on the table of the House.

[a] Printed as Appendix III on pages 93 94 infra.